க்கிடர்செய்யாமையு, நன்னெறிகாட்டும் பன்னெறித்தொகையுந், தொ
குத்துப்புலப்படச் சொற்றனனென்ப, வாவியிற்செங்கமலமுறுக்கவிழ்
ந்து, தேக்குடமுடைந்தெனச் செந்தேனுவட்டெழீஇ, வல்லிரும்பென்
னவலைகருங்கோட்டுக், கயவாய்ச்செங்கட் கடம்புனைசெருத்தம், கனை
யடிச்சயிரிபங் கன்றினையுள்ளப, பீரிடுதீம்பாற்பெருக்கொடுதழீஇத், தி
ரைபொருநதியின் கரையிறச்சாடி, முடப்பலவின் றகுடக்கனியகழ்ந்து,
கந்திப்பொங்கரையுந்தித்தள்ளிக், கன்னற்படப்பையைச்சிதைஞ்செய்
து, கழனிவாய்மடையைக் கரைந்துப்பெருகிக், கிளர்கடலகடு கழித
ரப்போகிக், கார்க்கடலதனைப் பாற்கடலாக்கும், புறநாடனைத்தும் பொ
லியுறப்பாகத், தலைமைபெற்றிடுதலிற் றலைப்பெயர்தரித்த, பொன்னி
சூழ்கிடந்த சென்னிநன்னாட்டில், வேற்கட்பிறைநுதல் மென்மலர்வ
னமுகச், சிதவிலோதச்செழுநகைத்தளவ, விலவிதழ்த்துவர்வாயினை
முலைச்சிற்றிடை,யலத்தகச்சீறடியஞ்சொனல்லார், முகிழ்ம்புனல்சுவற்றி
முரணுறும்பரிதி,யொற்றைச்சக்கரப்பொற்றடமணித்தேர்,யாத்தகொ
ய்யுளை யிகலெறறுகலின, மரகதக்குரகதம் வானின்வாவ, வோட்டும்வி
டங்க நாட்டுமாடத்துக், கருங்குழற்கூட்டு முருங்ககிற்றூம, மாவலிதன்
பாலீ ரேவடியேற்றுச், சேவடியளந்த தூவடிவொப்ப, விண்மிசையெழீ
இ வெண்டிரைசுருட்டுங், கண்ணகன்கங்கையைக் காளிந்தியாக்கி, மன்
பதையளித்த கொன்பெறுநான்முகத், தேவனூருஞ் சிறைவிரியனத்
தைக், கார்நிறக்காக்குணக்கரண்டமாக்கி, யொள்ளொளிவிரிக்கும் வெ
ள்ளியங்குன்றை, நீனிறமலையி னிலவச்செய்து, தண்ணிலாத்திரள்பொ
ழிவெண்மதிகுடலிற், றுளக்கறுகளங்கந்தோன்றக்காட்டித், தழைசெ
விப்பருவுக்கைத்தமனிரியாணை,வருவரையருவிகருமணிகொழிக்கும்,பா
ண்மையின்னபமர மதிப்பக்கடாமுமிழ், கரடக்காத்திர நால்வாய்க், க
ந்தடுகிம்புரிக் கவளத்தவளத், தமரக்கரியினைத் திமிரக்கரியெனத், தோ
ன்றச்செய்யுந் தூச்சிறையனத்தொ, டுள்ளான்குளத்தூர் வேளான்குள
த்தூர், புரிந்திடும்புண்ணியம் பூத்ததேய்ப்ப, நிலவியபுகழாளிறைகுண
சேகர, னுவரிமுத்தணிபுயச் சவரிமுத்தப்பன், முற்பவத்தவத்தா லுற்
பவமானோன், பல்காப்பியமெனும் பல்வைப்புனலி, னுடுமதிக்கோட்டரு
ந்தமிழ்க்குஞ்சர, நெறியினில்லாச் சிறியராங்கரிகள், வாய்விறடக்கும்
வாளரிக்குருளை. பொய்க்குப்பெரும்பகை புகழுக்கணிகல, மெய்க்குக்
களைகண்மே தகுதயாநிதி, நற்குணப்பொக்கிஷஞானப்பயோததி, கல்
விக்களஞ்சியங் கலைஞானபீடம், பாடாந்திரப்பெரும் பல்வப்பாரதி,
மானபூடணம் மதுரிதபாடணம், தீனர்மனோகரந் திவ்யகுணாகரம்,ஞா
னசாகரம் நற்குணசேகரம், வறிஞர்நிட்சேபம் மாணிக்கதீபம். அறிஞ
ர்க்கிலாபம் அமலப்பிரதாபம், புவனமனோக்கியம்புருடசிலாக்கியம், த
வறிலாவாக்கியந் தனிப்பெரும்பாக்கியம், சொல்லருமிரஞ்சிதஞ் சகு
ணசஞ்சிதம், நல்லவர்க்கிங்கிதம் நாவிற்றங்கிதம், தருமவாலயந் த
யைமகராலயம், பெருமையினிலயம் பெருநிதிவலயம், பெறலருநிதிய
ம் பிறங்குமெதியம், அறஞானோதயம் அவிர்பானோதயம், கனகவிக்கிரக
ங் கட்டநிக்கிரகம், தனசம்பூரணஞ் சத்துருநிவாரணம், நல்லவர்தே
சம் நற்பிரகாசம், புல்லர்தம்விநாசம் புண்ணியவிலாசம், இல்லறவா
சம் இதோபதேசம், புலவர்தம்மிடியாம் புணரிருளகல, நிதியொளிவி

நிக்கும் சதோதயபானு, பொறியடக்குதலாற் புவனந்தாங்கலான், மா
ப்பொறையுடைமையான் மணியேந்துதலாற், பாப்பரசென்னப்கருவ
ர்சில்லோர், கல்விகற்றனபோற் கசடறுகேள்வி, யறிந்திடநற்செவிய
மையாத்தன்மையிற், பூதலத்தருது பாதலத்துறுதலி னன்றிணையென்
னவறைகுவர்பல்லோர், தமிழ்க்கடலுண்டலிற் சங்கந்தழுவலி, லசலத்
திருத்தலிலருட்குணமுடைமையின், மகத்தியல்புரியுமகத்தியமுனியே,
யொப்பிவற்கென்னவுரைப்பர்கள்சிலரோ, யவன்கையிற்றெட்டனயாவு
மஃது, மிவன்கையிற்பட்டனவெல்லாம்பெருகும், குறியவனவனிவன்
கூறினெடிய, னுயர்ந்தனதாழ்ப்பனுவனிவனுலகிற், றாழ்ந்தனவுயர்த்
துந்தகைமையனுதலி, னிணையன்றெண்ணவிசைப்பவர்பலரோ, தேனுவு
மணியுந்திப்பியதருவு, நலந்தருபுயலொடுநவநிதியவனே, டொன்றிர
ண்டொருமூன்றுயர்ந்திடுநான்கைந், தாறேழோடெட்டாமொன்பதொ
ருபத், தாமெனவுரைக்குமருட்கொடையாளனு, னவின்கிழத்திநனுகுமி
டத்திற், பூவின்கிழத்திபொருந்தாளென்றே, முன்னோருரைத்தமொழி
தடுமாற, விருமையுமொருங்குறநிலகுஞ்சிலாக்கிய, னீதிநாயகநிபு
ணன் வேதநாயகவித்தகவேளே ......................................✻

கோட்டின்பந்தனையணைக்குங் காக்குளத்தூர்ச் சவரிமுத்துக்குரிசி
ல்பெற்ற, வேட்டின்பமாமுரலுந் தார்வேதநாயகவே ளினிமைநூலைக்,
காட்டின்பந்தந்தவிர்க்கு நீதிநூலெனவொன்று சமைத்தனனப், பாட்டி
ன்பத்தினுமினிதோ வீட்டின்பம்வீட்டின்பப் பான்மையாமே .........(௧)

பொன்னிலகுந்திணபுயத்தெம் வேதநாயகமகிபன் புகன்றநீதிக்✻
கொன்னிலகுநற்பொருளின் சுவைமுழுதுங்கலைமகளுட் கொண்டுநா
ணுன், மின்னுடலம்விளர்த்திறையு மன்னமிறங்காதுவே தனையேமே
வித். தன்னிகரிறவனமலர் தனிவெளுத்தாளெனிலினியான் சாற்ற
லென்னே .................................................................... (௨)

கனந்தருகரத்தெம்வேதநாயகமால்கல்வியம்பெருங்கடலயின்று,
வனந்தருநீதி நூலெனுஞ்செய்யை மாண்பொருண்மாரியானிரப்பந்,
தினந்தினம்வழிந்த சேடமுண்டகணும் செழுமணிப்பஃறலைச்செஞ்சு
டனந்தனுஞ்சேட னாயினனென்னி லவனியிலுரைக்குமாறெவனோ✻

சுகத்தியல்செல்வவேதநாயகவேள் சொல்லியநீதிநூலென்னு, மி
கத்தியல்பொருளினற்சுவையுணர்ந்துன் னேங்கிமாமலையமூச்சுயிர்த்து
மகத்தியல்புரிந்த பொருளையாக்கண்ணீர் வழிதரவன்டமிழ்சொற்ற✻
வகத்தியமுனியுங் குறுமுனியானு னயினுமறைகுவதெவனோ.. ......(௪)

தசரதனறுப தாயிரம்வருடந் தவம்புரிந் திராமனைப்பெற்றுத் ....✻
தண்டலையயோத்தி நகரினையாளத் தனிப்புகழினிதுபெற்றுய்ந்தான் ✻
வசையில்சீர்வேத நாயகவேணி மன்னிய வயிக்கிலீயத்தின் ...........✻
வளனெலாமுணர்ந்து மணியணிச்சுடிகை வாளர வுசியிற்கிடந்த...✻
வசலையில்வாழ்பல் லுயிர்கள்சன்மார்க்க வாற்றினையடைகுவான்கருதி
யருந்தமிழதனு னீதிநூலியற்றி யகிலங்கண் முழுவதுங்காக்கத் ......✻
திசையெலாம்புகழுந் தண்குளத்தூர்வாழ் தீரனுஞ்சவரிமுத்தப்பன்..✻
சித்திசேர்தவங்க ளெத்தனைகாலஞ் செய்தனனினைப்பெறத்தானே(௫)

தேமணக்குந்தெரியலணி சவரிமுத்துமணிபாலன் செல்வனான...*
பூமணக்குங்குளத்தூர்வாழ் வேதநாயகக்குரிசில் புகன்றசெய்ய ......*
பாமணக்குநீதிநூ றனையுணர்க்கக்கேட்கநிதம் பார்க்கயார்க்கு ........*
நாமணக்குஞ்செவிமணக்குங் கண்மணக்குமெனிலினியா நவில்வதெ
ன்னே ....................................................................(௬)

தங்கியபுகழ்சால்வேதநாயகவேள் சாற்றருந்தமிழினுலுணர்த்த...*
மங்கலநீதி நூறனையினிய வளனுறுமங்கம தென்பர் ....................*
துங்கமார்தரும சாத்திரப்பொருளின் றொகுப்பெனப் புகலுவர்வேதத்
துங்கமதென்னச் செப்புவர்கடல்சூழ் புவனியிற் கற்றறிந்தவரே... (௭)

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

சென்னபட்டணம் அட்டாவதானம் -ம-ா-ா-ஸ்ரீ

வீராசாமிசெட்டியாரவர்களியற்றியது.

பலகனிகளுடன்பாறேன் விரவியவாமெனநீதிபகர்நூலொன்று, கலகநிகழாதெவரு மனமகிழ்வான்முறைபுரியுங் கருணைவள்ளல், உலகநிகளங்குறுகப் பெருகுபுகழ்ந்துறையுணர்வுடையோர்க்கெல்லாந், திலகநிகராங்குளத்தூர் வேதநாயகக்குரிசில் செய்தானன்னே ........................................(௧)

---

சென்னபட்டணம் வித்வான்-ம-ா-ா-ஸ்ரீ.

கா- சபாபதிமுதலியாரவர்களியற்றியது.

உலகமுய்யப்பலநெறிக ளுணர்த்தவேதமதுதானே.......*
நிலவுமனிதவடிவாகி நீர்நாட்டுளதாங்குளத்தூரில் .... ... .....*
இலகவேதநாயகமென் றிசைக்குஞ்சிறப்புப்பெயர்புனைந்து..*
குலவுநீதிநூலொன்று கூறிற்றுணர்க்கொளுமுலகே.... ..(௧)

---

சென்னபட்டணம்-ம-ா-ா-ஸ்ரீ, அட்டாவதானம்

பு - அ - சபாபதிமுதலியாரவர்களியற்றியது.

வெண்பா.

நானூறெநாலடியென் றோர்வேதநாயகமால்.... .... *
தேனூறுஞ்சொல்விருத்தச் செய்யுளினுந் - றானீந்
நாற்பானவித்த நானூற்றதெனநீதி.......... .. ........ *
நூற்பாலமைத்தா னுவன்று ... ...... ...... . ......... (௧)

மகன்றந்தைக்காற்று முதவியிதுபோன்மென்...... *
றகன்ஞாலநன்குணர்ந்த தம்ம - மிகுநீதி...... .... *
பாயபுகழ்மைந்தற் பயந்தகுளத்தூர்வேத..... ...... *
நாயகமாறேற்ற நலனால்....... ....... ..............(௨)

## சென்னைச்சாற்றுக்கவிகள்.

### ம-ா-ா-ஸ்ரீ. விசாகப்பெருமாளையரவர்களியற்றிய

### நிலமண்டிலவாசிரியப்பா.

முதனடுவீறிலா முனைவன்படைத்த, நதிபதியுடுத்தஞாலத்துறை
வோர், பெறுதற்குரிய பெரும்பயனிவையென், றறைதருசுருதி மிருதி
யாதிய, வெண்மையன் றுணர்வ தெனமுனிவரரு, முண்மைவல்லுநரு
முன்னியுள்ளிரங்கு, பறமுதன் முப்பாலாகவப்பொருளைத், திறனுறத்த
மிழிற் றெள்ளிதின்வகுத்த, மாண்பமைநூலொடு சங்கமரீஇய, வேண
கொணுவலர்க ளியாத்தபன்னூலு, நன்கினிதாய்ந்து நயந்தெரிந்தெ
வர்க்கு, மங்கலசயிற்கவிபோ லியந்திரிபொரீஇப், புலப்படச்சொற்சு
வை பொருட்சுவைபொதுள, விலக்கணக்கவிஞரி யாவரும்வியந்து, மூ
டிதுளக்குறுவான் கடிகமழ்தேறலுங், கன்னலுமமுதுங் கலந்துகுழை
ந்தாங், கின்னிசைதழீஇய பன்னருஞ்சிறப்பி, னணிகெழுசெய்யுளாக்
மணிவடமேய்ப்பச், சால்புடைநீதிநூ லொன்றியற்றின, னளந்தறி
வொண்ணு வளக்குழூஉவுற்ற, தாடகவுலகெனு மதுபட்டாங்குசா,
லுடுதமென்னவோடிநிமிர்ந்தென, வுயர்வறவுயர்ந்தபுயறவழ்குடுமிப்,
பொன்மாணெயிலும் பன்மாளிகையும், விளங்கிச்செறிந்த குமாந்தை,
க்கிறைவன், பவந்தெறுகங்கா குலபரிபாலன், றவந்தரும்பொன்னனை
யெனுந்தண்ணளியோன், செந்தேன்பில்குபைந் தார்க்குவளையன், றி
சையருநான்கினுஞ் சென்றுகவிந்து, வசையறவோங்கிமலிபெரும்புக
ழோன், றன்னுயிராமெனத் தண்ணளிபுரிந்தே, மன்னுயிர்த்தொகுதி
மல்கப்புரப்போ, னூழிபெயர்வுற் றகிலஞ்சிதைப்ப, வூழிபெயர்னுமு
ளைபிறழாதோ,னகலைமுன்றுளமகவொன் றினுக்குப், பெருமலைப்பா
லைத்திருமலைப்பாறருஞ், சேணுயர்சோலைத் தோணிபுரத்தில், கொட்டா
ர்நட்டா ருலகிலையெனப், பட்டாபொனுமந்தரம்பாராமே, நாபேர்நூ
லைபோ னடுநின்றுட்கும், பீடுபெறுநற் பிராட்டுவிவாக, ஞாதிநாயகன
டிபணிந்தேத்தும், வேதநாயகனுமிகவல்லோனே.......................(௧)

### ஆசிரியச்சந்தவிருத்தம்.

தாருலாவியமொய்ம்பனுடைக தாருநேர் தருசெங்கையான்........ ❋
ரும்கலாவருமாரன்விஞ்சுத யாளனெண்புகழ்மைந்தனா.................. ❋
னேருலாவுபதாகையானுல சேமுற்றுகைசெய்குவான் .... ............... ❋
யாவுமாயினையொன்றிலாதொளி ரேகதேவையிறைஞ்சுவா. ..........❋
னீருலாவுதடாகமெங்கு நிலாவுகின்றகுளந்தைநவாப். ...................... ❋
திருபனுயர்நதிமரபுதவில்வரு நிபுணன்வரகுணசிங்கமாஞ் ............ ❋
சீருலாவியவேததாயக சிலனீதிசிறந்ததோர் ... .......... .............. .... ❋
தெளியுநூலினையுதவினன்மதி தெளிஞர்யாரும்வியக்கவே ...........(௨)

---

## விருத்தாசலம்- கவிராஜர்.

### தியாகராயப்பிள்ளையவர்களியற்றியது.

தேதீர்த்திரையெனுமங்கைகொடுசெங் கதிர்மணியுஞ்செய்யபொ
ன்னுஞ், சித்திரநித்திலத்திரையும் பத்தியினுற் குரய்வையினிற் செல்ல
வீசிச்சோதியுமிழ்வாரிசமே முதலியபல்வியன்மலர்க ளேயியங்கு, தோ
ய்ந்தாடுமாதர்நய னத்தைநயப்நிலங்கயல்கள் துள்ளியாட, மாதவவா
விகள்சூழுங் குளத்தூரிலேவாழு மனமாசில்லா,மனுநூலாந்திரியதனி
லார்வமெனு தெய்ந்நிறைவால் வளர்ந்தேபோங்க, வேதநாயகமெனு
மோர் வினைக்குலகி லநீதியெனுந் திமிரம்போக்கி, விள்ளரியநீதியெ
னுஞ் சுடர்விரித்த திறன்பெருமை வியப்பாமன்றே ....................(௧)

சென்னபட்டணம் வித்வான் - ம-ா-ா-ஸ்ரீ.
இராமலிங்கப்பிள்ளையவர்களியற்றியது.

வளங்கொள்குளத்தூரமர்ந்த வேதநாயகனருளால் வயங்கு
முன்னூல், உளங்கொள்மனுவாத்தனமேனோர் நீதிநூலந்நூற்பின்
னூறுநூலாகத், துளங்கிடுமவ்வூநறைபத் தோன்றலோர்நீதிநூல்
சொன்னனிந்நாள், விளங்குதமிழ்நூன்முன்னர்மற்றை நூலெலா
ங் கிழிபடத்தின்வெண்ணூலன்றே ............ ............(க)

சென்னபட்டணம்-ம-ா-ா-ஸ்ரீ.
சுப்பராயமுதலியாரவர்களியற்றியது.

நன்னீதிபதிஞர்களிதலைசிறப்பவந்நீர்மைநவிற்றநூல்கள்,
சொன்னீர்மையுடைமையி லெளிதுணர்வான்கோளூட்டுத் தொல்
லோராளர், மன்னீர்வளந்தருமன் றனைக்கேற்பவிந்நூலை வந்தரு
த்தோர், பொன்னீதியெனுங்குளத்தூர் வேதநாயகப்புலவன் பு
கன்றுன்மன்றே .............. .............(க)

திருநீர்மலை - ம-ா-ா-ஸ்ரீ.
கோபாலகிருஷ்ணகவிராயரவர்களியற்றியது.

மலைபசைக்கப்படினுநனி சீர்தூக்கித்தான்றேற்றும் வழுக்
கின்குழ்ச்சி, நிலையசைக்கப்படாதெனவே நின்றாழிப்பெரும்பு
னலி லெனநாவாய்புற், கலையசைக்கும்பிரானுகைத்த காழிதனி
னடிப்புரிவோன் கற்றோராருந், தலையசைக்கநீதிநூல் வேதநாய
கன்றமிழாற் சாற்றினனால் .............. .............(க)

திருநீர்மலை - ம-ா-ா-ஸ்ரீ.
சு-முருகேசமுதலியாரவர்களியற்றியது.

சீரோறுபுகழ்படைத்த முதமினுர்முன்னளிற் செப்புநீதிப்,
பேரோறுநூல்பலவு மிருட்படலம்போலொளிப்பப் பிறங்கோ
ராழித், தேரோறுகதிரோன்முன் றண்மதியிற்பொலியச்சீர்க் கு
ளத்தூர்வாழ்தண், டாரோறுபுயவேத நாயகனோர்நீதிநூல் சாற்றி
னனால் .............. .............(க)

கட்டளைக்கலித்துறை,

மறையவர்சூழ்குளத் தூர்வேதநாயக மாலொழுக்கம்.. ............*
பொறைநிறையாளன் புகனீதிநூற்சொற் பொருட்பொலிவை ..........*
அறைதருவீரா யிரந்தாலுடையவ னந்தனேனும்.. ............*
நிறைமதியாளற் கரிதெனில்யாவர் நிகழ்த்துவரோ ............(உ)

வெண்பா.

நளிகடனல்லாடைபுனை நானிலத்தோர்யாரும்..........*
எளிதினுணர்ந்துய்ய வெழிலார்-குளிர்பொழில்சூழ் ... *

கோதிலாச்சீர்க்குளத்தூர்க் கோன்வேதநாயகன்சொல். *
நீதிநூற்குண்டோ நிகர் ................................ (௩)

---

திருப்பாதிரிப்புலியூர்-ம-ா-ா-ஸ்ரீ.

சிவசிதம்பரமுதலியாரவர்களியற்றியது.

வெண்பா.

ஓதியுணர்ந்துலகோ ரொண்ணெறிக்கணேயொழுக *
நீதிநூலன்பா னிகழ்த்தினான்-நீதிகந்த... ...... ... *
நல்லோர்க்கினிய னவில்வேதநாயகமாம் ............ *
வல்லோன்குளத்தூர் வாழ்வான்... ........ .... ... (௧)

பாரோங்குவியன்மாக்க ளகத்திமிரம்பருகிநறும் பானுகோ
டி, யேரோங்குபுலவரக முககமலமலர்த்தியுதித் தெழுந்ததம்
மா, சீரோங்குகுளத்தூர்வாழ் வேதநாயகப்பெயர்கொள் சிறந்த
கீர்த்தி, நாரோங்குகுணக்கடல்வாய் நீதிநூலெனும்பானு நன்கு
மாதோ ... .. .......... ....... .... ..... .. .... .... ..... ..... .. ... (௨)

தேவியலாசிரியவிய லரசியலுந்தந்தையியதிமுடிமேலோர்க் *
காவியனவேதநா யகமாலோர்நீதிநூ லறைந்துமிக்க ... .. .. *
பாவியருப்புண்ணியராம் படிசெய்ததாலவனைப் பாரிலீசன். *
றாவியலாக்குருதிருபன் றாய்தந்தையெனநாளுஞ்சாற்றலாமே()

---

மலையாளம்-ம-ா-ா-ஸ்ரீ

இராமசாமிபண்டிதரவர்களியற்றியது.

பூமருவுமன்னுயிர்கள் பகையற்று நட்புற்றுப் பொலியும்
வண்ணஞ், சேமநீதியனவேத நாயகமா னீதிநூல் செய்தான்ப
ல்ல,பாமருவுநூலுணர்ந்தவ்வோருமருகிமாமியெனும் பகைகளை
தீர்ந்து, நாமகளும்பூமகளு மவனிடஞ்சேர்ந் தொத்துறைதல்
னயந்தாரப்பா.... .. ............ ... .... ...... .... ........ ...... (௧)

மனைபுதல்வர்சோதரர்தாய் தந்தையுற்றோர் யாவருநல்வழி
யுறுது, வினைவழிசென் றனரெனைத் தனையவர்யா வருமொழு
கவிதிவகுத்துட், புனைநீதி நூல்செய்தான் வேதநாயகனுடன் பூ
விலன்றோர், அனைய நூலுணரினஞ்சொற் கமைந்துநலமுறவரி
னி யஞ்சேனெஞ்சே ............ .. ............. ...... .......... (௨)

---

யாழ்ப்பாணம்-வித்வான்-ம-ா-ா-ஸ்ரீ.

விசுவநாதபிள்ளையவர்களியற்றியது.

இருப்புவனம்புகழ்குளத்தை வேதநாயகமகிப னிசைத்தநீ
தி, தருப்புரையினூலதனைத் தண்ணமுதமென்னிலது தனிவிதீ

மை, யரும்பும்விடத்தொடுமுதித்த தலைந்தன்றிக்கடைபட்ட காத லானற், கரும்பெனிலங்கசன்வில்லது மத்திமூப்பானெனப்புகலா ர் கவிவல்லோரே .......... .............. ..... ..... ....................... ...... (௧)

அந்ததிபோல்வாரி கடைந்தமரர்நாவிற்கினிய வமுதீந்தான் மால்,முந்ததிகந்தரம்புகழுங் குளத்தூர்வாழ்சவரிமுத்து முதல்வ ன்பெற்ற,சந்ததியாகியவேத நாயகமால்பல்லுயிர்க டாலினேடு, வந்ததிகாதநீதி நூற்றேனைச்செவிக்குமன்றவார்த்திட்டானே(உ)

---

பெங்களூர்-வ-தேவராசபிள்ளையவர்களியற்றியது.

தினத்தைவெல் பொறைசேர் வேதநாயக சேயேநீதி ................*
பனைத்தையு நவிற்றிநின்சீ ராய்ந்துன்னைப் பேசவான்றோர் ... *
மனத்தையு மேவல்கொண்டாய் வாக்கையு மேவல்கொண்டாய்*
தனத்தையு மீவாயாருன் றன்பணிமேற் கொள்ளாரோ.... .......(௧)

வெண்பா.

நன்னயமார்சீர்வேத நாயகமால்போலநர ..... .............. *
னென்னவுருவுற்றே னெனினுநெஞ்சே- யன்னனினூல்
கற்றேங்கொணீதி கனைந்தேங்காலேங்குபுகழ்...... ....... *
பெற்றேங்கொளுற்றேங்கொல் பேறு .......... ..... ...... (உ)

தேவைப்புகழ்கவென்று செப்புவான்போனீதிப் *
பாவைப்புகழ்ந்து பலபாடி - மாவைமகிழ் ....*
நன்னைப்பொருவேத நாயகவள்ளாலநின்னூர் .......... *
நின்னைப்புகழவைத்தாய் நீ ........ ........... ... . . (௩)

நீதிநூல்செய்தமனு நேர்வேதநாயகப்பேர்ச் ... . . *
சோதியினைநன்கு துதிக்கமலர்-வேதியனே...... *
யென்றுவீறில்ல தெனலாவிரவலா....... ..... ... . . *
நின்றுவீசற்றெனக்கு நீ......... ..................... . . ...(௪)

மேவுநாவாய்நிறைந் தின்பவெளந்தந்தப்ப ணிலமீதூர்ந்தேயா..*
சோவுமதி தோற்றிமஞ்சுற் றலையெறிந்து நீர்பெருக வுறைதலா லே,காவுதவிர்நீயியற்று நீதிநூல்கடலேயாஞ் சார்ந்துதோய்ந்து, காவுநிரம்வேதநா யகமகிபாபாவவினை கழுவுவோமே,.. .... (௫)

அளவாவண்பொருளளவாற் கடலுடலேயும்பரந்த தாற்றின் பூவு, முளவாமெய் வகைப்பொருளு முடைமையிற்பே ரண்ட முமா யோங்குநன்மை, பிளவாநின்னீதிநூ லெனில்வேத நாயக ப்பேர்ப் பெரியாய்மிக்க,வளவாநின் னுண்மதிக்கு வித்தனையுமட ங்கியதெவ் வாறுகூறே.... ........... ........... ............................. . . (௬)

ஆதிநாயகனிணை யடிக்குநீடுமெய்ச் ... *
சோதிஞானம்படாத் தோனுமுவுரை ... *
வேதநாயகமதன் விலத்துறுநய ... *
நீதிநூலுணர்த்தனை விளம்பியக்கவே ... (எ)

---

பெங்களூர்-ம-ள-ள-ஸ்ரீ,
ஆ - ஐயாசாமிமுதலியாரவர்களியற்றியது.

கற்றோருமற்றோருங் கண்டுடனமகிழ்வு ... *
பெற்றிடவோர் நீதிநூல் பேசினான் - குற்றமிலாச் ... *
சீர்வேதமுற்றுணர்ந்த செல்வன்செழுங்குவளைத் ... *
தார்வேதநாயகமாறுன் ... (க)

---

பெங்களூர்-உபாத்தியாயர்-ம-ள-ள-ஸ்ரீ.
சி - இராமலிங்கமுதலியாரவர்களியற்றியது.

மலரயன்வகுத்த வியன்புவியதனுள் வாழ்தருபுலவர்கள்வி டக்க, இலகுறுநீதிநூறன்னைச்சொற்று விரப்பவர்க் காசையைநிதமுய், பலர்புகழ்கொண்ட ஞானுறவனிப்போன் பன்னருமியல் முழுதுணர்ந்தோன், நலமலிகுளத்தூர் வாழ்புவன்வேத நாயகசு குணசேகரனே ... (க)

---

பெங்களூர்உபாத்தியாயர்-ம-ள-ள-ஸ்ரீ,
செ-சேஷாத்திரியையங்காரவர்களியற்றியது:

மறிதவழுஞ்சோலை வளருங்குளத்தூர்ப் ... *
பதிவேதநாயகமென் பண்பின்-முதியவர் ... *
நாமமுடையோனியற்று நன்னீதிநூற்கொன்று ... *
சாமியமெங்கே சாற்றத்தான் ... (க)

---

புதுவைவித்துவான்-ம-ள-ள-ஸ்ரீ.
சுவராயலுநாயகரவர்களியற்றியது.

நன்னெறிகள் வயக்குதலாற் கற்பனைகள் விளக்குதலா னவ ங்கொள்ளாருக், கன்னெறிகள் வகுத்திடலா னின்னீதி நூல்பர ணுப் பாருநாளும், பன்னெறிசால் வேதநாயகமகிபா வனைய புராபரனையீன்ற, மன்னெறிசா லொருதெய்வ மொப்பாகும் நீ யிதற்கு மாறொன்றின்றே ... (க)

வேதமுழுதுணர்ந்ததற்கு நாயகமாய் நீ பொலியும் வித மோர்ந்தன்றே, போதமுழுதுளதினக்கு வேதநாயகமெனும்பே ர் புனைந்ததந்தை, யேதமுழுதறநீசெய் நீதிநூலுணர்ந்துபெ யரிடாவாறன்னோர், கோதமுழுதொழியதுவும்வேதமேயென த்தெரிந்த குறிப்பானன்றே ... (உ)

நேடுபொருள்சிதறவிடல் புதைத்தலோரீஇ, வெளிப்படை யினிகழச்செய்து,பாடுபொருட்பெரும்புலவ ராதியர்க்குநல்குத ல்போற் பற்பணீஇத்,தேடுபொருள்சிதறவிட்டார் சிலர்புதைத்தா ர்சிலரன்ன செய்கைநீத்தக்,கூடுபொருள்வெளிப்படைசெய் தரு ள்வேதநாயகமால் குவ்விற்றேவே. ........................ ... (௩)

பார்ரகாவியம்புரிவார் பன்னூற்குமுனையிடுவார் பாரில்யார் க்குந், தாரகாவியமலிசீர் வேதநாயகமகிபா தழைசெல்வக்கு, பேரகாவியந்தொடையாய் நின்சீடனினிசெய் பெற்றிபோர் நூற், கோரகாவியந்தனன்யா னெனமொழியினுண்டாகு மிலச் சைதானே.................................(௪)

யான்முந்தியேகுவன்மற் றியான்முந்தியேகுவனென் றெ ழுந்தெல்லாம்வாய்ப், பான்முந்திவரவடித்துக் கொளுநினக்குந் தமிழ்வளர்த்த பாண்டியாசெந், தேன்முந்தியளியுணுந்தார் வே தநாயகமகிபா தெளியோர்நீதி, நூன்முந்தியுரைத்தலினி தாமே மெய்ப்பாடுபட்டு நுவன்றளாயே ............................ (௫)

---

புதுவை கவரன்மெண்டு இஸ்கூல் உபாத்தியாயர்-ம-ா-ா-ஸ்ரீ- கோவிந்தபிள்ளையவர்களியற்றியது.

மலர்தலையுலகில் வேதநாயகவேள் வகுத்தநன்னீதி நூலொத் தி, னலர்தலையுறி லஞதியிவ்வுலகி ஞதிநூன் முறைதிறம்பினாலு மி, நிலகுதன்னருட்கு வேதநாயகமென் றினியநற் பெயர்மனை மேற்றிப்பர், நலமுறவிடுத்தந் நூலினைப்புதுக்க நன்குலைப்பித்த து போலும் .............................................. (௫)

---

புதுவை செம்மவிராக்கினி மாதாகோவில் அச்சுக்கூடத்து எடிட்டர் ம-ா-ா-ஸ்ரீ. ஆரோக்கியசாமி பிள்ளையவர்களியற்றியது.

மாதனையிற்கலைஞான மில்லாருமெல்லாரு மனக்கணுற்ற* வேதமெனுமிருட்படல மிற்றொழியமெய்யெனுந் தகழியுட யோதரியவறத்தலம் பெய்துநற்ஞானமெனு முடர்போலிட்டு வேதநாயகக்குரவ னேற்றினனீதிநூல் விளக்கமாமே ....(௧)

---

புதுவை - ம - ா- ா - ஸ்ரீ. சாமி, பொன்னுசாமிமுதலியாரவர்களியற்றியது

சீலமருள்மானநலஞ் சேர்வேதநாயகமால்............ *
ஞாலமிசையுரைத்த நன்னீதி - நூலதனா.............*
னந்தணர்க்குவேத மறிஞர்க்கமுதுபவ ....... ....... *
வெந்தனர்க்கு நீர்பகைக்குவேல்.............. .............(௧)

புதுவை இஸ்கூல் உபாத்தியார் - ம-௱-௱-ஸ்ரீ.
மலையப்பிள்ளையவர்களியற்றியது.

எல்லாரும்வானவரு மிம்பர்வளர்மானவரு மினியகல்வி .*
வல்லாருமல்லாரும் வந்திக்கச்சிந்திக்க வாழ்த்தியேத்தச்.......... *
சொல்லாருந்தனைப்பயந்தகுரவர்தவமின்னதெனத்துலக்கிக்காட்டு.. *
நல்லாருணலவேத நாயகமானீதிநூ னவின்றான்மாதோ..... (௧)

செயற்கரியசெய்பவனைப் பெரியனென்றுமல்லானைச் சிறியனென்று, மயக்கறியார்சொனுமுறைக்குச் சான்றாகமேன்மைசான் மனுநூல்செய்த, பயக்குரியநினக்கதிது மற்றையர்வாய்ப் புகழ்க்காற்றுப் பரிவாங்கொல்லோ, கயப்பரிமாமுழுங்குமுன்றில் வேதநாயககுணக் கவிவல்லோனே ... ..... ..... ..... ........ (௨)

நீதமேயுருவாய்வந்த வேதநாயகனிகழ்த்து .... ..... .... .... *
மோதருநீதிநூலை யுள்ளமேசிந்திப்பாயேற் ....... ....... *
போதமும்முடையாய்தேவ போகமுமுடையாயாதி.... .... *
வேதமுமுடையாயந்நூல் விளைந்துகல்விளைந்துகல்லே (௩)

புதுக்கோட்டை - ம-௱-௱- ஸ்ரீ, சாமிஅய்யரவர்களியற்றியது.

இலைமறைகாய்போற்சுருதி யாதியநூலெங்கணுங் கரந்தநீதிகளை, விலைமறைதனைதமதியெனும்வளியால் வெள்ளிடைமலையெனத் திரட்டித், தலைமறையிதென வியற்றினனொருநூ றன்னனரிவேதநாயகமான். மூலமறையினம்பேணின்பிந்நூலன் னூன் முற்றுமோர்ந்தடைதருமின்பே ................................................ ......(௧)

காத்தல்கடவுட்கியற்கை கதிரவனுக்கொளியியற்கை கடிமலர்க்குப், பூத்தன்மணத்தலுமியற்கை நியாயாதிபதிக்கிழமை பூண்டமேலோன், ஏத்தரியவேதநா யகவெட்குநீதியெலா மெடுத்துப்பாவிற், கோத்தருளலியற்கையெம்ம னோர்க்கியற்கை யவன்புகழைக்கூறன்மாதோ()

நிந்தாஸ்துதி.

மழைநிகர்கொடையான்வேத நாயகமால்செய்நீதி ........ ....... *
தழைபுநன்னூலைப்பார்த்துத் தப்புதப்பென்பார்சில்லோர் . *
பிழைபிழை யென்பார்சில்லோர் பெருமையின் றென்பார்சில்லோர், கழைமதனனையான்வாக்கைக் கவிஞர்சீசியென்பாரால் (௩)

நீதிநூலென்னும் புத்தகத்தை அச்சடிக்கிய
எழும்பூர் ம - ௱ - ௱-ஸ்ரீ.
தாண்டவராயமுதலியாரவர்கள் ஸ்துதிசெய்தது.

தேன்மருவும் பாமொழியுந் தியாகராஜப்புலவன்...... .........*
றான்பயிற்று நற்கலையின் றன்மையினல் - யானுமுயர்.....*
தன்குலத்தூர்வாழ்வேத நாயகமால்செய்தருளும்..............*
இன்பநூனீதி மகிழ்ந்தேன் ....... ... ..............................(௨)

சாற்றுக்கவிகள் முற்றுப்பெற்றன.

# நீதிநூல்.

## அதிகார அட்டவணை.

# நீதிநூல்.

## அதிகார அட்டவணை.



ஆ அதிகாரம்-௪௫-இ கூடிய திருவிருத்தம் - ௪௱௪௰





கடவுள் துணை.

# நீதிநூல்.

## காப்பு.

ஆதிநூலொன்று மரும்பயன்யாருந்தெளிவா *
னீதிநூலொன்று நிகழ்த்தவே - மாதிரமோ *
டித்தரையனைத்தையு மியற்றியினிதிற்றிதிசெய் *
கத்தன்மலரொத்தகழல் காப்பு (௧)

மாதிரந்தனில் வாழ்பவர் யாவருந் *
நீதிகந்தறச் செய்கை முயலுவா *
னீதிநூலை நிகழ்த்த நிகரிலா *
வாதிதேவ னடியிணை யேத்துவாம் (௨)

## அவையடக்கம்.

வெயிலினைச் சோதிசெய்வான் விளக்கிடல் போலுங்காகங் *
குயிலினுக் கிசையுணர்த்துங் கொள்கையே போலுநட்ட *
மயிலினுக் குணர்த்துங்கான வாரண மெனவும்யாவும் *
பயிநூல கிற்குநீதி பகரயான் றுணிவுற்றேனால் (௧)

பானுவின் கதிரையுண்ட பனிக்கொளி செய்தல்போலும் *
வானுலாங்கொண்டல்பெய்யு மழையினைத் தழையிற்றூங்கித் *
தானும்பெய் தருவைப்போலுந் தமிழொரு மூலறுமாராய்ந் *
தானுவார் கவிசொல்வோர்முன் னறிவிலேன் பாடலுற்றேன் (௨)

முடவனோ யாடவந்தர் முன்னின்று பார்த்துவக்கத் *
திடமொடு மூகர்பாடச் செவிடர்கேட் டதிசயிக்கக் *
கடலுலகினிற்கண்டேன்னக் கனவினுங்கலையைத்தேரா *
மடமையே னுலகநீதி வகுத்திடத் துணிந்தேன்மன்னோ (௩)

பயன்கொள்வோ ரதனைநல்கும் பசுவுரு விலதென்றோரார் *
வியன்சினை வலைவுநோக்கார் விளைந்ததீங் கனிபறிப்போர் *
கயங்கொள்சே றகற்றித்தெண்ணீர் கைக்கொள்வா ரென்னநூலி *
னயங்கொள்வ துன்றிப்பாவி னவையைநோக் கார்மேலோரே (௪)

வேலைவா யுண்டநீரை மேகஞ்சிந்தினுமே சிந்துங் *
காவிடைக் கொண்டநீரைக் கழனியக் காற்குநல்கும் *
பாவலர்கற் றவையாசான்பாற் பகர்வர்யா னுலுணர்ந்த *
சிலர்பாற் கற்றதன்றோர் செவியுற நவின்றேனம்மா (௫)

கோவிலைப் பழிக்கினேனோன் குணனையும் பழித்ததொப்பாங் *
காவினைப் பழிக்கினுண்டார் கடிமலர்ப் பழித்ததொப்பாம் *
வாவியைப் பழிக்கிற்கொண்ட வண்புனற் பழித்ததாமென் *
பாவினைப் பழிக்கினீதிப் பயனையும் பழித்ததாமே (௬)



உ

கடவுள் துணை.

# நீதி நூல்.

## முதல் - அதிகாரம்.

## தெய்வமுண்டெனல்.

மண்டப மாதிகண்டோர் மயனுள னென்னல்போலுங் ........ *
குண்டலமுதல்கண்டோர்பொற் கொல்லனுண்டென்னல்போலு
மொண்டுகில்கண்டோர்நெய்தோனொருவனுண்டென்னல்போலு
மண்டமற் றகண்டஞ்செய்தோ னுளனென வறிவாய்நெஞ்சே (௧)

தீட்டுவோ னின்றியாமோ சித்திரந் திகழ்பொற்பாவை ........ *
யாட்டுவோ னின்றித்தானே யாடுமோ திவவியாழின்.... .... .... *
மீட்டுவோ னின்றிக்கீதம் விளையுமோ சராசரங்க..... ......... ... *
ளூட்டுவோனொருவனின்றி நன்கமைந்தொழுகுங்கொல்லோ (௨)

மரமுத லசைதலாற்கா லுளதென மதிப்பாரெங்கும்....... *
பரவிய புகையாற்செந்தீ யுளதெனப் பகர்வார்சுற்றும்........ *
விரவிய மணத்தாற்பாங்கர் வீயுள தென்றுதேர்வார் ........... *
பரனுளனெனுமுண்மைக்குப் பாரெலாஞ்சான்றுமன்றோ (௩)

நாதனில் லாதவீடு நாடுமே நடவாதென்னில்....................... *
வேதநா யகனிலானேல் விதுக்திர் மீனுதித்தல்.................. *
சீதநீர் பெயறருக்கள் சீவராசிகள் சுதித்தல்.... ..................... *
பூதமெள திசமெல்லாம் புரையற வொழுகற்பாற்றே ......(௪)

பூசம்பா வக்குமேனாட் பொருந்திய விசும்பைக்காற்றை ..... *
மேவகநூ லதனைமண்ணோர் மெய்யுறை யுயிரைநெஞ்சை ........ *
யேதமிலறத்தைக்கண்ணுற் பார்த்திலோ மெனினுமுண்டென்..*
றோதல்போற் றெய்வந்தானொன் றுளதென றேற்றமம்மா ..(௫)

வாசமூக் கறியுமன்றி வாய்செவி விழிமெய்தேரா .......... *
பேசவா யறியுமன்றிப் பிள்ளையோர் புலன்றேராது.......... *
நேசமார் தொண்டர்ஞான நேத்திரங் கொண்டுகாணு .... ..... *
மீசனை முகத்தின்கண்ணா லகத்தில்யார் காணவல்லார்.........(௬)

வானின்றி மழையுமில்லை வயலின்றி விளைவுமில்லை ............... *
யானின்றிக் கன்றுமில்லை பரியின்றி யொளியுமில்லை .... .. ... *
கோனின்றிக் காவலில்லை குமாரர்தா யின்றியில்லை ........ .... .... *
மேனின்ற கடவுளின்றி மேதினி யில்லைமாதோ .... ...... ... (எ)

கதிரவற் கொளியின்றென்னக் கண்ணிலார் கழறல்போலும் *
வதிரர்பே ராழியோசை மாறிய தென்னல்போலு ... ........ .. *
மெதிருறு பொருளைக்காணு திடருறு பித்தர்போலு....... ... *
மதியிலார் தேவின்றென்ன மருளொடு மியம்புவாரோ.........(அ)

அத்தன்றாய் முன்னோர்தம்மை யறிகிலா னிலரென்பானே... .*
சத்தமின் சுவைகந்தத்தைத் தரிசியா னிலவென்பானே...... *
நித்தனைக் கண்ணிற்காணு நீர்மையா லில்லெனன்றோதும்... .... *
பித்தரிற் பித்தர்பாரிற் பேசிட வுளரோவம்மா................ (கூ)

தேவனே யிலனென்மோக்கந் தீநர கில்லைவேதம்.................. *
பாவபுண் ணியங்களில்லைப் பரனிலை யென்போனில்லின் .....*
மேவலர் தீயிட்டல்லான் விபவமெல் லாஞ்சிதைத்துச் ......... *
சீவனை வதைசெய்தாலெஞ் செப்புவன் சிதடன்றானே .......(ய)



முதல்-அதிகாரம்-தெய்வமுண்டெனல்.

முற்றுப்பெற்றது.



௨-ம்-அதிகாரம்.

### தெய்வத்தன்மையும்வாழ்த்தும்.

ஆதியீ றில்லான்றன்னை யடைத்தகா ரணமொன்றில்லான்....... *
கோதிலான் கணத்துளண்டங் கோடிசெய் தழிக்கவல்லா ... . . *
ஞேதிடு மொப்பொன்றில்லா னுருவிலா னிருவின்மடங்குஞ் ... *
சோதிதன் னிழலாக்கொண்ட சோதியைத் துதியாய்நெஞ்சே(௧)

ஆணலன் பெண்ணுமல்ல னஃறிணை யலன்பாரல்லன். . .... ..*
சேணலன் புனல்காலல்லன் தீயல னைம்புலத்தாற் ........ .... ...*
காணரும் வடிவனித்தன் கத்தனம் மத்தன்சுத்தன்........ ..... ...*
மாணுற முறுக்கொண்டன்ன மாட்சியான் கடவுணெஞ்சே (௨)

தனையெலா முளன்றுரும்பு தன்னினு முளனண்டாண்ட.......*
நினையெலா முளன்மெய்யாவி நெஞ்சனு முளனியம்பு .... ... *
முனையெலாமுளன்றுன்மேவி யுறைபொருள்கெடக்கெடாதான்
புனைதபு தன்னைத்தானே பொருவுவோ ருருவனன்றே . . (௩)

உடுக்கணம் யாவும்வெவ்வே றுதயனு மொவ்வொன்றிற்கு .... . *
நடுக்கட்பூ வலயஞ்சோட னபமொடும் வரம்பில்கோடி..... .....*
படுக்கடுக காச்செய்தெல்லா மந்தரத் தமைந்துநிற்க ... ..... ..*
விடுக்கவொன் றின்றிக்காக்கு மெம்பிரான் பெரியனன்றே (௪)

பண்ணிய புவனமெல்லாம் படர்கையிற் பரிக்குமேக......... ..*
னண்ணிய கரஞ்சற்றேயி னழிஇயொன்றோ டொன்றுமோதித்
திண்ணிய வகிலகோடி சிதைந்துகு மெனவறிந்தும் ... ........ *
புண்ணிய மனுவாற்றேலைப் போற்றிடா வாறெனெஞ்சே (௫)

இதயந்தன் வேகத்தோடு மெண்ணிலவ் வியத்தகாலங் ........ ....*
கதமொடு மீச்சென்றாலுங் கடவுண்மெய் நடுவையன்றி....... . *
யிதரவங்கத்தைக்காணு தெனின்முடி யெவண்பொன்னுக்கும்*
பதமெவ னகண்டாகாரப் பராபரத் தனையீர்பாரீர் ... .... (௬)

விலகரு மருளின்மீக்கூர் விமலனை வாழ்த்தவேண்டி.. ..... ....*
னலகில்கற் பங்களேநம் மாயுளாய் மும்மைத்தாய.... .. .... ..*
வுலகமோ ருடம்பாயந்த வுடம்பெலாம் வாயாய்நித்தம் ..... .... *
பலகவி மாலைசூட்டிப் பரவினுமுடியுங் கொல்லோ............(௭)

உருவில் சூனியமாயாது முணர்விலா திருந்தநம்மைத்..... ....,.*
திருவுட லோடுஞானச் சிவனுகப் படைத்துச்..... ......... ...... *
சருவநன் மையுமேதந்து நம்மையுந் தந்தநாதன்... .... ......... *
மருமல ரடிக்குநம்மை வழங்குதல் பெரிதோநெஞ்சே..... ..(௮)

பூமிநம் மில்லாமற்றைப் பூதங்கள் பணிசெய்வோராஞ் ........*
சோமன்மீன் கதிர்விளக்காஞ் சூழ்மரம் பயிராகாரச். . ... ...*
சேமவைப் பாநமக்கித் திரவிய மியாவுநல்குஞ்........ .........*
சாமியை யுவமித்தேத்தச் சாமியம் யாதுநெஞ்சே.............. (௯)

தோன்றக விடமதென்னுந் துன்பசா கரத்திலத்தன்..... ..........*
றேன்றரு மலர்த்தாட்டெப்பஞ் சேர்கிலா தகன்றுநிற்போர்...*
வான்றனைப் பிரிந்தபுள்ளும் வாழுநீர் நீத்தமீனுங் .... ..... ...... *
கான்றனை யகல்விலங்குங் காவறீர் நகருமொப்பார்.............(௰)

பாரெலாம் பகைசெய்தாலும் பராபரன் கருணையுண்டேற் ..... *
சாருமோர் துயருமுண்டோ தாயினு மினியவையன் ........... *
சீரரு ளின்றேலெண்ணி றேர்கரி பரிபதாதிப் ..... ..... . . ..... .... *
பேரணி யுடையேமேனும் பிழைக்குமா றெவன்கொனெஞ்சே

இருநிதி பெற்றதின ரெண்ணிடா திகழ்ந்ததொப்ப ... ....... *
வருவடா யுருவமாய்நம் மாருயிர்க் குயிராயண்டம் .... ...... ..... *
பெருநில மெங்குமின்பப் பெருக்கெடுத் தோங்கிநிற்குங் .... .. *
கருணையங் கடலாடாது கழித்தனை வாழ்நாணெஞ்சே ....... (௰௨)

முன்னவன் றனையுளத்து முன்னமுன் னத்தெவிட்டாக் .. ... *
கன்னலோ வமுதோபாகோ கற்கண்டோ வெனத்தித்திக்கு .... *
மின்னன்மே வாதவன்று னெங்கணு நிறைந்திருந்து ........ ... *
மன்னனையை நீத்தசேய்போ லையனை நீத்தாய்நெஞ்சே ...... (௰௩)

ஆயுணாள் சிலவெங்காம மனந்தர்நோய் சோம்புகொண்ட ..... .. *
காயமே வளர்க்கவெண்ணில் கருமங்கள் செயலிவ்வாறே ....... *
தேயுநாள் கழியநிற்குஞ் சேடநா ளற்பமாகுந் .... ........ ........ *
தூயநா தனைத்தொழாமற் றொலைக்கின்று யலதயுநெஞ்சே (௰௪)

பொங்கலை யாழிதாண்டிப் பொருப்புகள் கடந்தோயாம .... ... *
லங்குமிங் குந்திரிந்தே யழிந்துபோ முடலைக்காப்பா ..... ....... *
யெங்கணு முள்ளோன்றானு னிருக்கையி னிருந்துபோற்றிப் *
பங்கமில் சுகப்பெற்றுய்யப் பாரமென் பகராய்நெஞ்சே. (௰௫)

மாசறு கடவுள்பாத மலரினைத்தினமும் போற்றிப் . ..... .... .. *
பாசமில் சுகம்பெறுமற் பவஞ்சத்தூ டுழலல்லைம்பொ ..... .. *
ஞாசனந் தன்னிலேறி யரசுசெய் தகைமைநீத்துக் ..... ..... ........ *
காசனக் கழுவிலேறுங் கயமையே கடுக்குமாதோ ..... . . ... (௰௬)

போதநா யகனையுன்னப் புந்தியே வெந்தியொப்பாந் ..... .... .. *
தாதல ரடிவணங்காத் தலைகுலை சிலையாஞ்சீர்சான் ..... ........ *
மாதலத் தவனைவாழ்த்தா வாயது தூயதன்று ..... ..... ..... *
காதலன் பொடுநீர்தூவாக் கண்களே புண்களாமால் ..... .... (௰௭)

கதிரவன் கிரணக்கையாற் கடவுளைத் தொழுவான்புட்கள் ..... .. *
சுதியொடு மாடிப்பாடித் துதிசெயுந் தருக்களெல்லாம். ... ..... *
பொதியலர் தூவிப்போற்றும் பூதந்தந் தொழில்செய்தேத்து *
மதிர்கட லொலியால்வாழ்த்து மகமேநீ வாழ்த்தாதென்னே (௰௮)

அறிவிலா ரரசனென்றற் கமைச்சரோ சான்றுமன்னோர்………*
செறிபெருந் தானையாண்மைத் திறலிலா னெனவறிந்தோம்…..*
வறியனொன் றிறைபிரக்கும் வாய்மையா லறிந்தோமென்று……*
நெறிவழா துலகந்தாங்கு நிருபனைத் துதியாய்நெஞ்சே….(௰௧)

இரவினு மற்றோர்பாரா விடைபினும் பாவஞ்செய்வாய்…..*
காதலா மலசம்போன்றுக் காலமு முணர்வோனெங்குந்…*
தரமொழி வீற்றிருக்குந் தன்மையெள் ளளவுமோராய்…*
பரனிலா விடமொன்றுண்டேற் பவமவண் செய்நீநெஞ்சே(௰௨)



உ-ம்-அதிகாரம்-தெய்வத்தன்மையும் வாழ்த்தும்.

முற்றுப்பெற்றன.

ஆக அதிகாரம்-உ-இ திருவிருத்தம் - ௩௰.



௩-ம்-அதிகாரம்.

அ ர ச ரி ய ல் பு.

எந்தவேளையினு நொந்தவர் துயர்கேட் டிடரிழைப்பவன்ற னதேக, மைந்தனேயெனினும் வதைத்திடவொல்கான் மாக்களின் சுகநலமன்றிச், சிந்தனைமற்றோர் பொருளினிற் செலுத்தான் நீமொழி கனவினும்புகலான், றந்தைபோற்றாய்போ லெவரையு மோம்புந் தன்மையனேயிறையவன்றே…… ……………… (௧)

மன்னுயிரனைத்துந் தன்னுயிரென்ன மகிழ்வொடுதாங்கியா ரேனு, மின்னலுற்றயர்ந்தோ மெனக்கலுழ்ந்திடிற்றன் னிருவி ழிநீரினையுகுப்பா, னன்னவெந்துயரை நீக்குமுன்றுன் றரு ந்திடான்றுயின்றிடானெவரு, நன்னகரெங்கு முளனெனப்பகர நாடொறுமியங்குவோன்கோனே……………………… (உ)

தாயறியாத சேயிருந்தாலுந் தானறியாதவரில்லை……*
யாயதன்மையினு லறவழிநிற்கு மறிஞராயறிந்தவர்க்குரிய…..*
தேயவாதிக்கத் தந்துதன்னீதிசெலுத்தியெங்கணுமருந்திணுக்குந்
தீயவரில்லொன் றிசையுறவடக்குந் திறலுளோன் பூதலவேந்தே ()

தன்புகழ்கருதி மருவலரோடுஞ் சமர்புரிந் துயிர்களை மா
ய்த்துத், துன்பமேசெய்ய விழைந்திடான் முற்போர் தொடுத்தி
டான் றன்னுயிரனைய, மன்பதைக்கிடுக்கண் யாவரேசெயினும்
வாளமரியற்றிநீக் கிடுவா, னின்பதுன்பங்க டனக்குமற்றவர்க்கு
மேகமென்றெண்ணுவோன்வேந்தே.......... .......... . . . . . . (௪)

தானினிதியற்று மனுநெறிப் படிமுன் றானடந்தறவழிகாட்
டி, ஞானநற்குணத்தின் மேன்மைபாலெவர்க்கு நாயகன்றானெ
னத்தெரித்துத், தானமுந்தயையு மெய்மையுந்தவமுந் தற்பா
ன்வணக்கமும் பொறையு, மானமுமிகுத்து நரரெலாஞ்செழிக்க
மகியரசளிப்பவன் மன்னே.............. ......... ............ .........(௫)

சத்திரஞ்சோலை சாலைகள்குளங்க டண்ணதி மதகொடாலய
ங்கள், வித்தியாசாலை மாடகூடங்கள் வேறுவேறமைத்து வேளாண்
மை, சத்தியமகலா வாணிகமாதி சகலநற் றொழிலவரவர்க, ணித்
தியமுயல வித்திசைபுரக்கு நிருபனே நிருபனுமன்றோ .. (௬)

காதிறைவனுக்குக் கண்ணெனலான்மெய் காண்குற் றெ
னுமொழிமாற்றி, வாதிகள்சாட்சி சாதகமெல்லாம் வகைவகையி
னிதுகேட்டமைந்த, மேதினிக் கிழமை நீங்கிடுத்தன்மை விளையி
னு நடுவினீங்காது, பாதியாவனுவும் பகுத்துதீர்ப்பதுவே பார்
த்திபன் கடமையாமன்றோ . ........ ........................................(௭)

மன்னவன் வலிசெங் கோலினுலன்றி வாளினாற் சேனையாலி
ல்லை, நன்னெறிவழுவா மன்னவன்றனக்கு நாடெலாம் பேரரணு
லகின், மன்னுயிரெல்லா மவன்படையன்னோர் மனமெலா மவ
னுறைவீட, பின்னதன்மையனு யரசளிப்பவனை யிகல்செயுந்
தெறுநருமுளரோ...... .......... .......... ... ...................(௮)

கைப்புனையேற்றுப் பொய்ப்புகழேலாக் காதினனருள்
பொழி கண்ணன், றப்புரைவழங்கா நாவினன்புவியோர் தாசன்
றெனவுணர் மனத்தன், செப்பயன்மடவார் காணருமுரத்தன்
றிருந்தலர்காணரும் புறத்த, னெப்பொழுதினுஞ்சென் றியாரு
ங்காண்முகத்த னீசனன்புடையவ னிறையே .... .......... ..... (௯)

கொடுங்கோலரசன்.

கொடியமன்னவர்க்குக் குடிகளேயொன்னார் கோட்டை
யேயமர்க்களமவர்த மடிகடோய்நிலமெங் கணும்படுகுழியாமவி

ன்றிடு மன்னமும்விடமா, நெடியவாசனமே காசனமேடை நீ
மி நழை யோர்நமன்றூதர், கடிமனைமயானக் காடெனிற்கொடு
ங்கோற் காரணருப்புமாறுளதோ .................... (௰)



௩-ம்-அதிகாரம்-அரசியல்பு முற்றுப்பெற்றது.

ஆக அதிகாரம் - ௩ - இ திருவிருத்தம்-௪௰.



௪-ம்-அதிகாரம்.

## குடிகளியல்பு.

வேந்தனேயில்லா விடினுலகத்து மேலதுகீழதா மனைஞ்
செய், காந்தனுக்கடங்கிக் களத்திர நடவாள் காதலர்தந்தைசொற்
கேளார், மாந்தர்வேளாண்மை முதற்றமக்குரிய வளமைகூர்தொ
ழில்களின் முயலார், சாந்தருந்திய ராவரோற்றீயர் தன்மையைச்
சாற்றுமாறெவனே .................... (௧)

நம்மனைமைந்தர் கிரகம்வாழ்வெல்லா நரபதியாலவ னில
னே, லம்மனைதீயர் கைவசமாவ ளருநிதிகொள்ளையா நாளும்,
வெம்மையோடொருவ ரொருவரையுண்பார் மேலவரசடரான்
மெலிவா, ரம்மவீதெல்லா முணர்ந்தரசனைக் கமைதனற்குடிக
ளினியல்பே .................... (௨)

வேறு.

நதியினு முயர்பனை நந்துங் காருலாங் .................... ✻
கதியினு முயர்வரைத் தருக்கள் காயுமால் .................... ✻
பதியினு முயர்ந்தடங் காப்பைஞ் ஞீலங்கள் .................... ✻
விதிசெயல் சிதைந்தக மெலிந்து நையுமே .................... (௩)

தரையெனு முடற்கொரு தலைவனே தலை .................... ✻
நரர்பல வுறுப்புக ளலங்கொண் மெய்யது .................... ✻
சிரமுறும் பொறிவழிச் செல்லுந் தன்மைபோ .................... ✻
[illegible]ரவர சனுக்கமைந் தொழுகும் வையமே .................... (௪)

சொன்னத்திருடன் சிறுகள்வனத் தூறிபேச .... .... ... ...*
லென்னப்பொரு ளாசையுள்ளான்பிற ரிச்சைநீர்த்து.. .. .. *
மன்னத்திரு ஞானமுளாத்தன் மற்றோர்துறக்கும் ... .... ....*
பொன்னைக்கவரச செயும்வஞ்சனை போறுமானோ.........(௫)

வேறு.

வாயிற் றேனுந்தன் வாலிற் கொடுக்குஞ்சே ............... ..... ....*
ரீயின் வாயினி லிங்கிதச் சொல்லொடுந் ....... ....... .... .. .... *
தீய செய்கை யுளானைத் தினஞ்சிறு ... ... ................... .... *
சேயு மெள்ளுந்தன் சித்தையு மெள்ளுமே ........ ... .... (௬)

இகத்தின் வாழ்வினி லிச்சை யறுன்றனைச்.... .... ......... ..... .. *
சகத்தி னிற்குரு சாமியென் றோதுதல் ......... .... .. ...... *
சுகத்தை நீங்கத் துயரஞ் செறிதர ...... ... .................... ....*
ரகதனை வீடென் றனறதல் சிவனுமே ........ ....... ........ (௭)

ஆதிதேவ னறிவில் லவர் செயுங் ... ... ....... ............ *
கோதினைக் கடை கொண்டு பொறுக்கினு ....... ... ........ . *
நீதிநூலை யுணர்ந்து நெறிதவிர் ..... ............ .. .... ..*
வேதி யர்க்கு விமோசன மில்லையே .... ... .................. .... (௮)

ஒருமை யாய்த்தன் னுதர நிமித்தமே .... ...................... .... *
திரும வேடந் தரிக்குதல் மெய்ப்புலி ........ ..... .... .. .... ....... *
பிருவை தன்னைப் புசிக்கப் புருவையின் ................ .... .... .. *
சருமம் பூண்டங்கு சார்த லிகர்க்குமே .. ............. ....... (௯)

௯-ம் - அதிகாரம்- பொய்க்குருவின்றன்மை முற்றுப்பெற்றது.

ஆக அதிகாரம்-௯-இற் திருவிருத்தம்-௯எ.

௰-ம்-அதிகாரம்.

பிதாமாதாவை வணங்கல்.

பின்னவோர் பொருடந்தோனாச் சிவனுள் ளளவுமுள்ளத் .... *
துன்னவே வேண்டுமென்ன வுணர்த்தனர் பெரியோர்தேகந் .. *
தன்னையா ருயிரைச்சீரார் தரணியின் வாழ்வைத்தந்த .. ..... *
அன்னைதந் தைக்குச்செய்யு மருங்கைம்மா றுளதோவம்மா...(௧)

கடவுளை வருந்திச்சூலாய்க் கைப்புறை யுடனேந்த, ... ...... *
மிடர்களாற் றுதரந்தன்னி லீரைந்து திங்கடாங்கிப் ....... ... *
புடவியி லீன்றுபன்னாட் பொற்றனப் பாலூட்டித் .... .... *
திடமுற வளர்த்துவிட்ட செல்வியை வணங்காய்நெஞ்சே . . (௨)

எப்புவி களும்புரக்கு மீசனைத் துதிக்கவேண்டி ........ . . ..... *
யப்பனே தாயேயென்போ மவனையே துதிக்கவேண்டி .... . . *
மொப்பனை யுளதோவேலை யுலகிற்கட் புலனிற்றோன்றுஞ் ... *
செப்பருந் தெய்வமன்னார் சேவடி போற்றாய்நெஞ்சே ..... (௩)

வைத்தவ ருளமுவப்ப மலர்நிழல் கனியீயாத ...... ... ...... *
வத்தருத் தன்னைவெட்டி யழலிடு மாபோலின்று .. .......... *
கைத்தலத் தேந்திக்காத்த தாதற்றாய் பிதாவையோம்பாப் ...... *
பித்தரை யத்தன்கொன்று பெருநர கழற்சேர்ப்பானே ......(௪)

ஈன்றவர் நம்மாலுற்ற வெண்ணரு மிடர்கட்கான்ற ... ..... ... *
மூன்றுல கமுமொப்பாமோ மூப்பினு விளைப்பாலன்னோர் ... *
கான்றவன் சொற்கள்கன்னல் கான்றவின் பாகெனக்கொண் .... *
டேன்றுமோ வென்னத்தாங்கி யூழியஞ் செய்யாய்நெஞ்சே.... (௫)

ஈங்கெதி ருதவிவெஃகா தெவருமோ ருதவிசெய்யா ..... ..... .. *
ரோங்குசேய் வாழ்வுபு முடலெய்க்கும் பொழுதுதம்மைத் .. *
தாங்கிடுந் தாங்கொண்டன்னுந் தன்மைநோக் காதுபெற்றோர் .... *
பாங்குடன் வளர்க்குமன்பு பரவலாந் தகைமைத்தன்றே .... (௬)

மண்ணினி லன்னைதந்தை மறமறஞ் செயினுநோன்பு .... ..... *
பண்ணினு முடல்வருந்தப் பணிபுரி யினுமருந்தொன் ..... .... *
றுண்ணினுங் களிக்கினுந்தன் புறப்பு ரினுமனத்தொன் ... ... *
றெண்ணினுந் தம்பொருட்டன் றின்சுதர் பொருட்டாலன்றோ.()

ஐயமெய் யம்மணத்தோ டழுவதை யன்றிப்பேசச் .... ..... .... *
செய்யவொன் றறியாநொய்ய சிற்றுடற் சேய்வளர்த்திங் .... .. *
குய்யவேண் டுவசெய்தா ருயிரினு மினிதாகக்காக்கும் ........ . *
பொய்யிலன் புடைத்தாய்தந்தை போல்பவ ருளரோநெஞ்சே ()

மனைவியும் வீயின்வேறோர் மனைவியைக் கொளலாம்பெற்ற – *
தனையரா தியரிறப்பிற் றனித்தனி பெறலாம்பின்னும் ...... .... *
புனைபொரு ளீங்கின்மற்றோர் பொருளையும் பெறலாமத்த *
யனையிறந் திடின்வேறத்த னன்னவரு வாரோநெஞ்சே... .... (௯)





## வேறு.

ஒருத்திபஞ்ச காலமதிற் றுறைக்குத் தன்முலைப்பா லூட்டி னோத்தா, னொருத்தமிலைச தந்தைதனைச் சுமந்தோடி யொருவனொன் றிடரைத்தீர்த்தா, னொருத்தன்றன் றந்தைக்கே யுயிர்கொடுத் தானெனப்பலவா யிராமைய நாட்டினர், சரித்திரஞ்சொல் லுதைய நிவாய் நெஞ்சமேயீங் கெனைத் தாங்குவாயே ... (ம)



எ-ம்- அதிகாரம் - பிரமதாவைவணங்கல் முற்றுப்பெற்றது.

ஆக அதிகாரம்-எ-க்கு திருவிருத்தம் - எஎ.



## அ-ம்- அதிகாரம்.

### பாலரைவளர்த்தலும் படிப்பித்தலும்.

அயற்பொரு ளிறங்கவ ரரத னங்கள்போற் ... *
செயப்பிறி தறிகிலாச் சேயர் சுற்றுளோர் ... *
கயப்புறுந் தீச்செயல் கற்கையா லவர் ... *
நயப்புறுஞ் சேர்க்கையை விலக்க னன்றரோ ... (க)

விளையிள மரந்தனை நிமிர்த்தல் வாய்க்கும்பொன் ... *
னிளகிய பொழுதணி யியற்ற லாகுநல் ... *
வளமுறு கேள்வி நூன் மாண்பு நற்குண ... *
மிளமையி லன்றிமூப் பெய்தி னெய்துமோ ... (உ)

மாலினு மிருவரு மருவி மாசிலாப் ... *
பாலனைப் பயந்தபின் படிப்பி யாதுயர் ... *
ஞாலமேற் செல்வமா வளர்த்தறங் கட்டோர் ... *
காலனை வளர்க்கின்ற காட்சி போலுமே ... (ங)

தீதுநன் றறிகிலாச் சேய னென்செய்வார் ... *
கோதற வவரைநன் னெறியிற் கூட்டிடா ... *
தேதங்க ளவர்முன்செய் திழிவைக் கற்பிக்குந் ... *
தாதைதாய் புதல்வர்க்குச் சத்துருக்களே ... (ச)

சுகமுறு வாழ்விலை யெனினுந் தோன்றற்குச் ... ... *
சகமதிற் கலையறந் தனைப் பயிற்றுத ... ... *
லகநிணந் தருதந்தை மரக னர்த்தனை ... ... *
யிருபர மிரணடினை யீதலொக்குமே ... ... (ரு)

கலைபயிற் றுறுகா தலர்க்கு டாநிதி ... ... *
நிலையென வள்கருந்த நெறியில் பித்தர்க்குக் ... ... *
கொலைசெய்வா ளீவதுங் குழவி தன்னைமா ... ... *
மலையினே ரத்துவைப் பதுவு மானுமே ... ... (சு)

பயிர்களை யெடுத்திடப் பல வளித்தல்போற் ... ... *
செயிரினைக் கடிந்துநற் செயல் வியந்தருந் ... ... *
தயையொடுஞ் சேயினை வளர்க்குந் தந்தைதாய் ... ... *
துயருறு வண்ணமத் தோன்றலை காக்குமே ... ... (எ)

நிதிசெல வாய்க்கெடு நீசர் வவ்வுவர் ... ... *
மதியினை மயக்கிவெம் மறம் விளைத்திடுங் ... ... *
கொதியழ னரகிடுங் குணமுறுங் கல்வியும் ... ... *
விதிதரும் பதிதரும் வீடு நல்குமே ... ... (அ)

புவிநடை கடவுண்மெய்ப் போக மன்பரஞ் ... ... *
செவியினே தாதொரு சேனயப் பார்விட ... ... *
லவியென ஆருமா றறிகிலான் றனைக் ... ... *
கவியமில் புரவிலைத் தோட்டுங் காட்சியே ... ... (கூ)

தீபராய் வறியராய்ச் சிலர் வருந்தலுந் ... ... *
தூயராய்ச் சிலர்புவி துதிக்க வாழ்தலுந் ... ... *
தாயினுற் றந்தையாற் சமைந்த தன்மைபாற் ... ... *
சேயரை நன்னெறி செலுத்தன் மேன்மையே ... ... (ய)



அ-ம்-அதிகாரம்-பாலரைவளர்த்தலும் படிப்பித்தலும் முற்றுப்பெற்றன.

ஆ-அதிகாரம்-அ-இ திருவிருத்தம் - அஎ.



௯-ம்-அதிகாரம்

## மாதரைப்படிப்பித்தல்.

கல்வியே யறவழி காட்டு மாண்மகன் ... ... ... ... *
செல்வழி யறிந்திடான் வித்தை தேருமுன் ... ... ... ... *
அல்வளர் கூந்தலா ரரிய நூலின்றி ... ... ... ... *
நல்வழி யுணர்ந்ததி னடக்கற் பாலரோ ... ... ... ... (௧)

பெண்மகள் கெடுவளென் றஞ்சிப் பெற்றவன் ... ... ... *
உண்மைநூ லவட் குணர்த் தாமை தன்மனைக் ... ... ... *
கண்மறு புருடரைக் காணு மென்றதை ... ... ... ... *
யெண்ணையாத் தவன்பறித் தெறித லொக்குமே ... ... ... (௨)

காவலன் பயத்தினாற் கற்பைக் காக்கின்ற ... ... ... *
பாவைய ரரியநூற் பயன் றெரிந்திடிற் ... ... ... ... *
பாவபுண் ணியநெறி யறியும் பண்பினாற் ... ... ... *
சீவனீங் கினுமய லவரைச் சேர்வரோ ... ... ... ... (௩)

பொருந்துநற் கலைதெரி பூவை கற்பது ... ... ... *
திருந்தியே மிகுமலாற் றேய்ந்து போமெனல் ... ... ... *
வருந்திடா துயிர்தரு மருந்தை மானிட ... ... ... *
ரருந்திடிற் சாவொன் றடைத லொக்குமே ... ... ... (௪)

முடவரோ நடக்கினு மூங்கை பேசினுந் ... ... ... ... *
திடமொடந் தகர்வழி தெரிந்து செல்லினு ... ... ... *
மடமயி லனையர்நூல் வாசியா ரெனி... ... ... ... *
லடமினன் னெறிதெரிந் தடையற் பாலரோ ... ... ... (௫)

அரிவைய ரோசமு சார வல்லினில் ... ... ... ... *
விரிசுடர் விளக்கென விளங்குவா ரவர்க் ... ... ... *
குரியநன் னூலுணர்த் தாமை கூடையா... ... ... ... *
லெரியொளி விளக்கினை மறைத்தலேய்க்குமே ... ... ... (௬)

நீதிநூன் மைந்தர்க்கு நிகழ்த்தி மென்மல ... ... ... *
ரோதியர்க் கோதிடா தொழித்தல் மெய்யினிற் ... ... ... *
பாதியை யேயலங் கரித்துப் பாதிமெய் ... ... ... *
மீதினி லணியின்றி விடுத்தலொக்குமே ... ... ... (௭)

